2 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

பதிவு எண் எம்: 8798

கதிர் 13 ★ மதுரை 13—11—75 வியாழன் ★ மலர் 237

## பாரதத்தை படம்பிடித்து காட்டும் பம்பாய்

பம்பாயில் நடைபாதைகளில் 90 ஆயிரம் பேருக்கு மேல் வாழ்கின்றனர். நூற்றுக்கு 17 பேர் நெருக்கடியான சேரிகளில் வாழ்கின்றனர். நெருக்கடிமிகுந்த மிகச் சிறிய வீடுகளில் 61 சதவீதத்தினர் வாழ்கின்றனர். 20 சதவீதத்தினர் வெளித் தரைகளில் வாழ்கின்றனர். மீதமுள்ள 2 சதவீத மக்களில் ஒரு சதவீதத்தினர் பங்களாக்களில் வாழ்கின்றனர். மீதி ஒரு சதவீதத்தினர் வேறுபட்ட வகையான இலலங்களில் வாழ்கின்றனர். இவ்விபரங்களை நகர்ப்புறத்திட்ட நிபுணர் ராஷ்மிமேயூர் என்பவரால் தரப்பட்டது.

## வேலைவாய்ப்பு வீழ்ச்சியின் வேகம்

ஸ்தாபன ரீதியான தொழில்துறையில் 1973-ஆம் ஆண்டு வேலை வாய்ப்பு அதிகரிப்பு 4. 1 சதவீதம் என்ருல் 1974-ம் ஆண்டில் ஏற்பட்ட அதிகரிப்பு 2. 4 சதவீதம்தான்.

—"எகானமிக் அண்ட் பொலிடிகல் வீக்லி"

### இரயில்வே ஸ்டிரைக், அவசர நிலை காலங்களில்

# போலீஸ் செய்தி தொடர்புகள் சிறப்பாக செயல்பட்டது என்கிருர் மத்திய அமைச்சர்

புதுடெல்லி, நவ. 10— உணவு இலாகா, செய்தித் தொடர்பு ஆகியவற்றைப் பொறுத்தே இந்தியா போன்ற வளர்ச்சி அடையும் நாடுகளின் ஸ்திரத்தன்மை உள்ளது என்று இந்திய உள்துறை அமைச்சர் பிரம்மானந்தரெட்டிபேசினுர்.

போலீஸ் ரேடியோ அதிகாரிகளின் 17வது மாநாடு டெல்லியில் நடைபெற்றது. அம்மாநாட்டின் 6வதுநாளாகிய இன்று பேசிய மத்திய அமைச்சர் பிரமானந்த ரெட்டி மேற்கண்டவாறு பேசினுர். இம்மாநாட்டில் எல்லை பாதுகாப்புபடை, மத்திய ரிசர்வ் போலீஸ், அசாம் துப்பாக்கி போலீஸ், இந்திய — திபெத் எல்லை போலீஸ் ஆகியவற்றின் செய்திக் தொடர்பு அதிகாரிகளும் கலந்து கொண்டுள்ளனர்.

அவர் மேலும் பேசுகையில் உள்நாட்டு பாதுகாப்பையும், சட்ட ஒழுங்கையும் காப்பதற்கு மாநிலங்களுக்குள்ளும், மாநிலங்களுக்கு இடையேயும் உள்ள செய்தித் தொடர்புகள் மிக முக்கியமானவை. அவைகளை சரிவரச் செய்ய வேண்டிய பொறுப்பு போலீஸ் ரேடியோ அதிகாரிகளைச் சார்ந்ததாக உள்ளன என்ருர்.

போலீஸ் வேலைகளுக்கு மட்டும் போலீஸ் செய்தி தொடர்புகள் விலைமதிப்பிட முடியாததாக இருக்கவில்லை, இந்தியா போன்ற பரந்த நாட்டில் தினசரி ஏற்படுகின்ற அவசர நிலைமைகளை சமாளிப்பதற்கும் போலீஸ் செய்தித்தொடர்புகள் விலை மதிப்பிட முடியாததாக உள்ளது. இது அரசாங்கத்தால் உணரப்பட்டுள்ளது என்றும் அவர் கூறினுர்,

மேலும் பல இடங்களில் பல சந்தர்ப்பங்களில் போலீசின் கம்பியில்லா தந்தி செய்தி தொடர்புதான் [வயர்லெஸ்] நிர்வாகத்திற்கு செய்தித் தொடர்புகளாக பயன்பட்டது.

இது ஆகர்ஷிக்கத்தக்க சேவைகளை அளித்தது, ரெயில்வே போராட்டத்தின் போதும் தேர்தல் காலத்திலும், புதிய அவசர காலத்தில் ஏற்பட்ட சவால்களை சமாளிக்கவும் போலீஸ் வயர்லெஸ் செய்தி தொடர்புதன் சிறப்பை வெளிப்படுத்தியது என்றும் அம்மாநாட்டில் மத்திய உள்துறை அமைச்சர் பிரமானந்த ரெட்டி கூறினுர்.

எந்தச் சந்தர்ப்பத்திலும் தயார் நிலையில் உங்களுடைய செய்தி தொடர்புகளை வைத்துக்கொள்வதில் சிரமம் இல்லையென நான் நம்புகிறேன் என்றும் அவர் கூறினுர்.

மாநில அரசுகளது போலீஸ் செய்தி தொடர்புகளை நவீனப்படுத்த மானியமாகவும் உதவியாகவும் மத்திய அரசின் உள்துறை அமைச்சகம் நிதி கொடுத்துள்ளது. வயர்லெஸ் செய்திக் கருவிகளின் எண்ணிக்கை 4 மடங்கு உயர்ந்துள்ளது தற்போது வயர்லெஸ் செய்தித் தொடர்பு கருவிகளின் எண்ணிக்கை 45 ஆயிரம். வயர்லெஸ் கருவிகளுடன் உள்ளசெய்தித் தொடர்புகள் மொத்த போலீஸ் ஸ்டேசன்களில் 30 சதவீதத்திற்கே உள்ளன என்று அவர் குறிப்பிட்டார்.

மேலும், போலீஸ் செய்தித்தொடர்புகளை நவீனமயப்படுத்தி அதன் உயர்ந்தபட்ச அனுகூலங்களை பயன்படுத்துமாறு அனைத்து மாநில முதலமைச்சர்களுக்கும் தான் கடிதம் எழுதியுள்ளதாகவும் அவர் குறிப்பிட்டார்.

இம்மாநாட்டில் அமைச்சரை வரவேற்றுப் பேசிய போலீஸ் செய்தித்தொடர்பு டைரெக்டர் சி பி ஜோஷி என்பவர் தற்போது 45 ஆயிரம் வயர்லெஸ் கருவிகள் உள்ளன; ஆனுல் தேவைப்படுவது 2 லட்சம் ஆகும் எனக்குறிப்பிட்டார்.

### ஸ்பானிய சஹாராவில்

## ஸ்பெயினின் இரட்டை வேடம் விடுதலைஸ்தாபனம் குற்றச்சாட்டு

மாட்ரிட், நவ. 10— ஸ்பானிய சஹாரா நாட்டின் மீது மொராக்கா நாட்டிற்கு உரிமை உண்டு என்பதை ஊர்ஜிதப்படுத்துவதற்காக மொராக்கா நாட்டினர் 3 லட்சத்து 50 ஆயிரம் பேர் ஸ்பானிய சஹாராவுக்குள் பயணம் செய்தனர் அல்லவா? அவர்கள் அனைவரும் மொராக்காவை நோக்கி திரும்பிச் செல்ல ஆரம்பித்து விட்டனர்.

ஸ்பானிய சஹாராவை ஆட்சி செய்யும் ஸ்பெயின் அரசாங்கம் தனது படைகளை மொராக்காவின் எல்லையிலிருந்து 40 கிலோ மீட்டர் தூரத்தில் படைகளை நிறுத்தி வைத்திருந்தது. அதனைக் கடந்து மொராக்காவினர் சென்ருல் தாக்கப்படுவர் என எச்சரித்திருந்தது. எனவே மொராக்காவினரும் சம்பிரதாயத்திற்கு மொராக்காவின் எல்லைப் பகுதியில் குறிப்பிட்ட தூரம் மட்டும் சென்றனர். கூடாரம் அமைத்தனர். அதன் பின்பு திரும்ப ஆரம்பித்து விட்டனர்.

திரும்பிவிடுமாறு மொராக்கோநாட்டு மன்னன் இரண்டாம் ஹுசேன் உத்திர விட்டிருந்தார்.

மொராக்காவினரின் பயணம் பற்றி ரேடியோவில் பேசிய மன்னன் ஹுசேன், "பயணத்தின் குறிக்கோளும், விருப்பமும் எதுவோ அதை அடைந்தாகி விட்டது என்றும் பிரச்னைக்கு தீர்வுகாண ஏனைய வழி முறைகளை நாம கையாள வேண்டும் எனவே, புறப்பட்ட இடத்திற்குதிரும்புங்கள் என்றும் கூறினுர்.

#### ஸ்பெயின் அரசாங்க நிலை

ஸ்பானிய சஹாராவுக்கு ஐ நா தனது பார்வையாளர்களை அனுப்ப வேண்டும் என்ற யோசனையை ஐ நா நிராகரித்து விட்டது என்று ஸ்பானிய அரசாங்க செய்திகள் கூறினவாம்.

ஸ்பானிய சஹாராவை விட்டுவிடுவதே எங்கள் விருப்பம் என நாங்கள் ஏற்கெனவே அறிவித்துள்ளோம்' என்று ஸ்பானிய அரசாங்க அதிகாரி ஒருவர் கூறினர்.

மேலும் ஸ்பானிய சஹாராவில் ஒரு காலனி யுத்தம் நடைபெறுவதை ஸ்பெயின் விரும்பவில்லையாம். ஆனுல் அங்நாட்டில் ஒரு அபாயகரமான சூனியமான நிலை ஏற்படுவதைத் தடுக்கவே ஐநாவின் ஆதரவுடன் மிகக்குறுகிய காலத்திற்கு ஸ்பெயின் நாட்டினர் அங்கு இருப்பார்களாம்.

#### விடுதலை இயக்கம் குற்றச்சாட்டு

ஸ்பானிய சஹாராவுக்கு சுய நிர்ணய உரிமையளிக்க வேண்டும் எனக் கோரும் அந்நாட்டு விடுதலைஸ்தாபனமான போலிசாரியோ என்னும் ஸ்தாபனம் ஸ்பெயின் மீதுகுற்றஞ்சாட்டியுள்ளது. ஸ்பானிய சஹாரா பிரச்சினை மீது மொராக்காவுடன் நடத்தும் பேச்சு வார்த்தையில் ஸ்பெயின் இரட்டை வேடம் போடுவதாக அது நேற்று (நவ 9-ல்) குற்றஞ்சாட்டியது.

மேலும், அன்னிய நாட்டினரின் ஊடுருவலிலிருந்து ஸ்பானிய சஹாராவை ஸ்பெயின்காக்கும் எனவாக் குறுதி கொடுக்கிறது. ஸ்பானிய சஹாராவுக்குள் ஊடுருபவர்களை மிரட்டவும் செய்கிறது. ஆனுல் ஆயிரக்கணக்கான மொராக்கோ நாட்டு ராணுவத்தினர் ஸ்பானிய சஹாராவுக்குள் தங்குதடையின்றி நுழைந்துள்ளனர். ஸ்பானிய சஹாராவில் இருக்கும் தங்கள் சொந்தநாட்டினரையும் அவர்களது நலன்களையும் தனது கட்டுப்பாட்டில் உள்ள மிக முக்கியமான பாஸ்பேட் சுரங்கங்களையும் காக்கவே ஸ்பெயின் கவனம் செலுத்துகிறது. அதே சமயத்தில் ஸ்பானிய சஹாராவின் வடபகுதி வழியாக மொராக்கோ நாட்டினரை அனுமதித்துக் கொண்டிருக்கிறது என்றும் அவ்விடுதலை ஸ்தாபனம் குற்றஞ்சாட்டியுள்ளது.

## கேட்டதோ ஆறு நூறு வந்ததோ மூவாயிரம் நூறு

"நமது நாட்டில் கடந்த 5 மாதங்களாக அமைதி நிலவுகிறது, மக்கள் அனைவரும் மகிழ்ச்சியாக இருக்கிருர்கள். விலைவாசி இறங்குகிறது, வேலையின்மைகுறைகிறது, வேதனைகள் களைகின்றன, துன்பச்சுமைகுறைந்து சுபிட்சம் களிநடனம் புரிகிறது" என்று அகில இந்திய ரேடியோவில் விடாது ஒலிபரப்பப்படுகிறது.

அதைப்பின்பற்றும் சில பத்திரிகைகளில் பிரசுரிக்கப்படுகிறது.

ஆளும் காங்கிரஸ் மற்றும் அதனைச் சார்ந்துநிற்கும் கட்சிகளின் மேடைகளில் முழங்கப்படுகிறது.

ஆனுல், அன்ருடம் வரும் செய்திகளும்-
நாட்டில் நடக்கும் நிகழ்ச்சிகளும்—
கிடைக்கும் அனுபவங்களும்—
நமக்கு உணர்த்துவது என்ன?
இதோ...

திருச்சியிலிருந்து ஒரு செய்தி
கடந்த 9 ந் தேதி வெளிவந்துள்ளது.

தேசிய மயமாக்கப்பட்ட ஒரு பெரிய வங்கி. 600 எழுத்தர்கள் வேலை காலியாக இருப்பதாகவும் அந்த வேலைக்குச் சேர மனுச்செய்பவர்கள் எஸ் எஸ் எல் சியில் சிறப்பாக தேறியிருக்கவேண்டும் என்றும் அண்மையில் ஒரு விளம்பரம் செய்தது, அந்த வங்கி.

அவ்வளவுதான்...மனுக்கள் வந்து குவிந்தன.

மனுக்களைப் பரிசீலனை செய்வதற்கு முன்னதாக வந்த மனுக்களை எண்ணிப்பார்த்தால்...

இருந்தது ஓராயிரம் அல்ல, ஈராயிரம் அல்ல!
பத்தாயிரம் அல்ல இருபதாயிரம் அல்ல!
மூன்று இலட்சம் மனுக்கள்!
கேட்டது ஆறுநூறு—
வந்ததோ மூவாயிரம் நூறு மனுக்கள்.
கேட்டதைப்போல 500 மடங்கு...

ஆம். வேலையின்மை குறைகிறது! வேலைவாய்ப்பு அமோகமாகப் பெருகுகிறது! இல்லையா?

## பங்களாதேசத்தில் புதிய ஆட்சி

டாக்கா, நவ. 10— பங்களா தேசத்தின் புதிய ஆட்சியினது ஜனதிபதியாக சையீம் உள்ளார் அல்லவா? அவரோடு முப்படைகளின் தளபதிகளும் நிர்வாகத்தில் உள்ளனர்.

சையீம் பங்களாதேச ராணுவ சட்ட ஆட்சியின் தலைவர். இவர் தனது பொறுப்பில் பாதுகாப்பு இலாகா, வெளிநாட்டு விவகார இலாகா, திட்டம், நாடாளுமன்ற நடவடிக்கைகள் ஆகியவற்றை பிரதானமாக கவனிப்பார். மேலும், ஏனைய முப்படை தளபதிகளுக்கு கொடுக்கப்பட்டுள்ள இலாகா விவகாரங்களை மேற்பார்வையிடுவார். தேவையான வழிகாட்டுதலும் அளிப்பார்.

ராணுவ தளபதி ஜியாவூர் ரஹ்மான் நிதி, தொழில், அன்னிய வர்த்தகம், கல்வி, செய்தித்துறை ஆகிய இலாகாக்களை கவனிப்பார்.

கமாண்டர் மொஷ்ரஃப் ஹிஸ்ஸன் என்பவர் கப்பல், துறைமுகம், நிர்வாகம், ரயில், காடு ஆகியஇலாகாக்களை கவனிப்பார்.

வைஸ் மார்ஷல் தவாப் என்பவர் குடும்பக்கட்டுப்பாடு திட்டம், உணவு, விவசாயம் ஆகிய இலாகாக்களை கவனிப்பார்.

## மின்சார தொழிலாளர் கூட்டு மகஜர்

திருநெல்வேலி, நவ. 10— நெல்லை மின்திட்டத்தில் மத்திய அலுவலகத்தில் தேங்கிக் கிடக்கும் வேலைகளை களப்பணியாளர்களைக் [உதவியாளர்கள்] கொண்டு வேக வேகமாக முடித்து வருகிறது மின்வாரியம். இவ்வாறு வேலையில் ஈடுபடுத்தப்படும் களப்பணியாளர்களுக்கும் 'சம வேலைக்கு சம ஊதியம்' தரப்பட வேண்டும் என்றும், அவர்களை உடனே எழுத்தர்களாக நியமிக்க வேண்டும் என்றும் சிஐடியூ, ஏ ஐ டி யூ சி சார்பான சம மேளனம, திமுக சார்பான தொ மு ச ஆகிய சங்கங்கள் கோரி வருகின்றன.

இக்கோரிக்கையை வற்புறுத்தும் வகையில் இங்கு பணிபுரியும் 65 தொழிலாளர்களும் கையொப்பமிட்ட மகஜரை சிஐடியூ சங்க உதவிச் செயலாளர் தோழர் ஏ நடராஜனும் மற்றும் சம்மேளனம, தொ மு ச தலைவர்களும் கோட்டப் பொறியாளர் மூலம் தலைமைப் பொறியாளருக்கு அனுப்பியுள்ளனர்.

### அருப்புக்கோட்டை நெசவாளர்களுக்கு

## கூலி குறைப்பு

### மாஸ்டர் வீவர்களின் தீபாவளி 'பரிசு'

அருப்புக்கோட்டை, நவ. 11— ஏற்கனவே கூலி போதாது என்று குமுறிக் கொண்டிருக்கும் கைநெசவு தொழிலாளர்களது கூலியில ரூபாய் 10 லிருந்து 25 வரை கடந்த 1-ந் தேதி முதல் குறைத்துள்ளனர், அருப்புக்கோட்டையில் உள்ள மாஸ்டர் வீவர்கள். இந்த அக்கிரமத்துக்கு கடந்த 7-ந் தேதியன்று நடந்த சர்வகட்சி ஆலோசனைக் கூட்டத்தில் கண்டனம் தெரிவிக்கப்பட்டது. இக்கூட்டத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட், திமுக, அதிமுக, இந்திரா காங்கிரஸ், முஸ்லிம் லீக், இந்திய கம்யூனிஸ்ட் ஆகிய கட்சிகளின் பிரதிநிதிகள் கலந்து கொண்டனர். மறுநாள் நடந்த சர்வகட்சி நெசவாளர் பிரதிநிதிகள் கூட்டத்தில் கமிட்டி ஒன்று அமைக்கப்பட்டது தலைவராக சிவராமன் [திமுக] செயலாளராக கே கந்தசாமி [மார்க்சிஸ்ட்] தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

கூலி குறைப்புக்கு எதிர்ப்பு தெரிவித்தும் பிற கோரிக்கைகளை வற்புறுத்தியும் மாநில தொழில் அமைச்சர், மாவட்டக் கலெக்டர், மற்றும் மாஸ்டர் வீவர் சங்கம் ஆகியவர்களுக்கு மகஜர்கள் அனுப்பப்பட்டுள்ளன.

31—10—75 வரை கொடுக்கப்பட்டு வந்த கூலியிலிருந்து 15 சதவீதம் கூலி உயர்வு 8 33 சதவீதம போனஸ், ரகம் மாற்றும் போது ஏற்படும் செலவுகளை மாஸ்டர் வீவர்களே ஏற்றுக்கொள்ளுதல் கூட்டுறவு நெசவாளர் சங்கங்களில் அளிக்கப்படும் பாவு, ஊடை நூல்களுக்கு கழிவு தரப்படுவதுபோல் மாஸ்டர் வீவர்களும் வேஸ்டேஜ் வழங்குதல்—நெசவாளர்களிடம வசூலிக்கும் வட்டக் காசுகளை நிறுத்துதல், பெண் நெசவாளர்களுக்கு பிரசவ கால உதவிப்பணம ரூ 100 கொடுத்தல் ஆகிய கோரிக்கைகள் அந்த மகஜரில் வற்புறுத்தப்பட்டிருந்தன.

## நிறவெறி கொடுமைக்கு லண்டனில் கண்டனம்

லண்டன், நவ.10— ரொடீசியா நாட்டின் பெரும்பான்மை மக்களான கறுப்பர்களை ஐயான்ஸ்மித் என்னும் வெள்ளை நிறவெறியனை பிரதமராகக் கொண்டுள்ள அரசாங்கம் அடிமைகளாக நடத்துவதைக் கண்டித்து பிரிட்டனின் தலைநகரான லண்டனில் இரண்டாயிரத்துக்கும் அதிகமானேர் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

மேலும் நிறவெறியன் ஐயான்ஸ்மித் கொடுங்கோலாட்சியில் தூக்கிலிடப்பட்டு கொல்லப்பட்ட கறுப்பர்களின் ஞாபகார்த்தமாக, ரொடீசியா விடுதலை முன்னணியைச் சார்ந்த சுமார் 40 பேர் போலியான தூக்கு மரம் ஒன்றை சுமந்து சென்றனர்.

## உல்லன் ஆலை இழுத்து மூடப்பட்டது

பம்பாய், நவ. 10— பம்பாய்க்கு அருகில் உள்ள தானவில் இருக்கும் ஆலை ஒன்றின் நிர்வாகம் திடுதிப்பென்று அந்த ஆலையை மூடியதால் நாலாயிரம் தொழிலாளர்கள் வேலையின்றி உள்ளனர்.

ரெய்மான்ட் உல்லன் ஆலை என்னும் பெயர்கொண்ட அந்த ஆலையின் மூடுவிழா கடந்த வியாழக்கிழமை ஏற்பட்டது. போனஸ் பிரச்சினையில் நிர்வாகத்துக்கும் தொழிலாளர்களுக்கும் தகராறு ஏற்பட்டதாம்,

பிரச்சினைகளை சுமுகமாக பேசித்தீர்க்க விருப்பாமல் திடுதிப்பென்று அந்த ஆலையை இழுத்து மூடியது நிர்வாகம்.

### நாகைத் தாலுகாவில்

## நவம்பர் புரட்சி விழா

நாகப்பட்டினம், நவ. 11— நாகைத் தாலுகாவில் நவம்பர் புரட்சி தின விழா சீரும் சிறப்புமாக கடந்த 7-ந் தேதியன்று கொண்டாடப்பட்டது.

அன்று கிராமங்கள் தோறும் செங்கொடிகள் ஏற்றப்பட்டன. உலகக் கம்யூனிஸ்ட் இயக்கத் தலைவர்களின் படங்களும் இந்தியப் பாட்டாளி வர்க்கத்தின்முன்னணிப் படையான மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்களின் படங்களும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. தாலுகா முழுவதிலுமுள்ள விவசாயிகளும், தொழிலாளர்களும்— அன்று வேலைக்குச் செல்லாமல்—நவம்பர் புரட்சி தினவிழாவில் பங்கு கொண்டனர்.

திருவாரூரில் உள்ள மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் நாகை தாலுகா குழு அலுவலகமும் அலுவலக வாயிலில் தலைவர்களது படங்களும் செங்கொடிகளாலும். தோரணங்களாலும், மின்விளக்குகளாலும் சிறப்பாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. காலையில் அலுவலகத்தில் வாழ்த்து முழக்கங்களுக்கிடையே செங்கொடி ஏற்றப்பட்டது.

#### திருவாரூர்

இங்குள்ள, கட்சியின் மாவட்டக் குழு அலுவலகம் செந்தோரணங்களாலும், மின்விளக்குகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. காலையில், தமிழ்நாடு விவசாயிகள் சங்கச் செயலாளர் தோழர், கோ வீரய்யன் புரட்சி முழக்கங்களுக்கிடையே செங்கொடிஏற்றி வைத்தார்.

### தமிழகத்தில்

## தோழர் பி. ராமமூர்த்தி கலந்து கொள்ளும் பொதுக்கூட்டங்கள்

நவ. 14,15 தென்னுற்காடு
16 சென்னை
17 கோவை
18 சேலம்
19 திருச்சி
20, 21 தஞ்சை

### சேலம் ஜவஹர் மில் தொழிலாளர் போனஸ் கோரி போராட்டம்

## ஆலை நிர்வாகம் சட்டவிரோத கதவடைப்பு

சேலம், நவ. 10— சேலம் ஜவஹர் மில் தொழிலாளர்கள் போனஸ் கோரிக்கைக்காக கடந்த1-ந் தேதி முதல் போராடி வருகிருர்கள். ஆலை நிர்வாகம் கொள்ளை லாபம் பெற்றிருந்தும், சமீபத்தில் வெளியான போனஸ் அவசரச் சட்டத்தைக் காட்டி 4 சதவீதத்திற்கு மேல் போனஸ் தர மறுத்துள்ளது. தொழிலாளர்கள் சங்கவித்தியாசமின்றி கூட்டுப்போராட்டக் கமிட்டி அமைத்து, அதன் தலைமையில் வேலைநிறுத்தம் செய்து வருகின்றனர். ஆலை நிர்வாகம் 9-ந்தேதியன்று இரவு திடீரென்று—மில்லை கதவடைப்புச் செய்து ஒரு அறிவிப்பை வெளியிட்டுள்ளது. இது தொழிலாளர்கள் மத்தியில் மேலும் ஆத்திரத்தைத் தூண்டியுள்ளது. தொழிலாளர்கள் தொடர்ந்து போராடி வருகிருர்கள்,

## ஜெனிவா மாநாடு இஸ்ரேலின் அகம்பாவம்

ஜெருசேலம், நவ, 11- ஜெனிவாவில்நடக்கவிருக்கும் மத்தியகிழக்குசமாதான மாநாட்டில் பாலஸ்தின விடுதலை ஸ்தாபனம் [பி, எல், ஒ] கலந்து கொள்ள அனுமதி அளிக்கப்பட்டால் இஸ்ரேல கலந்து கொள்ளாது என்று இஸ்ரேலிய பிரதமர் இட்ஜாக் ராமின் கடந்த ஞாயிற்றுக்கிழமையன்று அமைச்சரவைக் கூட்டத்தில் தெரிவித்தார்.

யூதர்களது ஆட்சியைத் தகாப்பதையே அடிப்படை குறிக்கோளாகக் கொண்டுள்ளதாம்.

எனவே, அவ் விடுதலை ஸ்தாபனத்துடன் உட்கார்ந்து பேசமாட்டார்களாம்.

## கால்நடை வளர்ப்பு திட்டத்துக்கும் கடன்

புதுடெல்லி, நவ. 10— ஆடு, மாடு போன்ற கால்நடை வளர்ச்சித்திட்டமொன்றை ஆந்திரபிரதேச அரசாங்கம விஜயவாடாவில் அமைக்கப்போகிறதாம், அதற்கும் கூட இந்திய அரசாங்கம் ரூ 25 லட்சத்து 50 ஆயிரம் கடன் ஸ்விட்சர்லாந்திடமிருந்து வாங்குகிறது. இதற்கும் ஒரு ஒப்பந்தம் இரு நாடுகளுக்குமிடையே ஏற்பட்டுள்ளது.

ஏற்கெனவே, கால்நடை வளர்ப்புத்திட்டங்களை கேரளாவிலும், பஞ்சாபிலும் நடத்துவதற்கு ஸ்விட்சர்லாந்து கடன் கொடுத்துள்ளதாம்.

## சுதந்திர இந்தியாவில் குழந்தைகள் நிலை

இந்தியாவில் 9 கோடிக் குழந்தைகளுக்கு இளம் பிள்ளைவாத நோய் ஏற்படும் அபாயம் உள்ளது,

அவர்களுக்கு வருடத்துக்கு 31 கோடிரூபாய் தடுப்பு மருந்து செலவு செய்ய வேண்டும், ஆனுல், அதற்கான திட்டம் தேசிய அளவில் எதுவும் இல்லை.

## இளைஞர் காங்கிரஸ் தலைவர் பதவி விலகல்

புதுடெல்லி, நவ. 10— அகில இந்திய இளைஞர் காங்கிரசுக் கட்சியின் தலைவர் பிரிய ரஞ்சன் தாஸ் முன்ஷி தன்னுடைய பதவியிலிருந்து ராஜினமா செய்துள்ளார். பதவி விலகல் கடிதத்தை காங்கிரசுக் கட்சித் தலைவர் பரூவாவுக்கு நவம்பர் 5-ந் தேதியே அனுப்பிவிட்டதாகவும் ஆனுல் இன்னும் அபதவி விலகல் ஏற்றுக்கொள்ளப்படவில்லை என்றும் அவர் தெரிவித்தார்.

## இணை-துணை வேந்தர் ராஜினமா இல்லை

கோழிக்கோடு, நவ. 17 கேரள கூட்டணி அரசு. கோழிக்கோடு பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராக டாக்டர் நூர்முகமதுவை நியமித்ததற்கு ஆட்சேபம் தெரிவித்து தனது இணை துணைவேந்தர் பதவியை ராஜினமாச் செய்வதாக பேராசிரியர் சுகுமார் அழிககோடு அறிவித்தார் அல்லவா?

இப்போது தன்னுடைய நண்பர்களின் விருப்பத்திற்கிணங்க ராஜினமாச் செய்வது என்ற முடிவை பேராசிரியர் அழிககோடு மாற்றிக் கொண்டார், அவர் விடுத்துள்ள ஓர் அறிக்கையில் பல்கலைக்கழகத்தின் நலன்களுக்காக தான தொடர்ந்த பதவியில் நீடிக்கவேண்டு என்ற நமது நண்பர்களின் கருத்தை தான் ஏற்று கொண்[illegible] [illegible] துள்ள

# தீக்கதிர்

## சொல்லும்செயலும்

"கள்ள மார்க்கெட்காரர்களுக்கு மரணதண்டனை வழங்கவேண்டும் என்று கூறுகிறார்கள். இது சீக்கிரம் ஏற்படுமென்று நம்புகிறேன்" என்று 10—11—75 அன்று பெங்களூரில் கர்நாடக மாநில வக்கீல்கள் மகாநாட்டில் மேறகு வங்கமாநில முதல் அமைச்சர் திரு சித்தார்த்த சங்கர் ராய் குறிப்பிட்டார். சமுதாய விரோத சக்திகளைப் பற்றித் தனக்கு எவ்வளவு கடுமையான அபிப்பிராயமிருக்கிறதென்று வெளியிட்டுக்கொள்ள விரும்பினர் போலும்.

இவர் இவ்வாறு கூறியது ஒன்றும் புதிதல்ல. பல வருடங்களுக்கு முன்பு பண்டித ஜவஹர்லால் நேரு பாரதப் பிரதமராயிருந்தபோது, "கள்ளமார்க்கெட்டுக்காரர்களை வீதியிலிருக்கும் லாந்தர் கம்பங்களில் தூக்குப்போட வேண்டு"மென்று அடித்துக் கூறினர். அவருடைய பேச்சும் காற்றோடு போயிற்று.

திரு ராய் தனது "உள்ளக்கிடக்கையை" மக்களுக்கு வெளியிட்ட இதே காலகட்டத்தில்தான் மத்திய நிதி அமைச்சர் திரு சி. சுப்ரமணியத்தின் இலாகா, கள்ளப் பணத்தைப் பதுக்கிவைத்திருப்பவர்களுக்கு அவர்களது செல்வத்தின் அளவை வெளியிட்டால் சலுகைகள்வழங்குவதாகவும், யாருக்கும் தெரியாமல் இரகசியத்தை வைத்திருப்பதாகவும் வேண்டுகோளும் வாக்குறுதியும் அளித்திருக்கிறது. இந்த இருவரும் ஒரே கட்சியிலிருப்பவர்கள்தான். ஆளுங்காங்கிரஸ் கட்சியில் முக்கிய தலைவர்களாகக் கருதப்படுபவர்கள்தான். இதே திரு சி சுப்ரமணியம் அவர்களின் இலாகா கள்ளப்பணத்தை வெளியே கொண்டுவர முன்பு பெயரளவுக்குப் பல சோதனைகளும் பிரமாதமாக மிகைப்படுத்தி விளம்பரப்படுத்தப்பட்ட பல படையெடுப்புகளையும் முன்பு சில நாட்களுக்கு நடத்தியது. அதில் தோல்வியுற்று இப்போது கள்ளமார்க்கெட்டுக்காரர்களைக் கெஞ்சும் படலத்திற்கு இறங்கியுள்ளது. திரு சித்தார்த்த சங்கர் ராய் அவர்கள் மேற்கு வங்கத்துக்குத் திரும்பியவுடன் காலங்கடத்தாமல் கள்ளமார்க்கெட்டுக்காரர்களைத் தூக்கிலிட ஏற்பாடு செய்யப்போகிறார் என்று அவருடைய பெங்களூர் பேச்சிலிருந்து நினைத்து நாம் யாரும ஏமாற வேண்டியதில்லை.

காங்கிரஸ் கட்சித் தலைவர்கள் சொல்லுக்கு நேர் விரோதமாகச் செயல்படுவது, அன்னிய மூலதனம் சம்பந்தமாக அனுசரித்து வரும் கொள்கையிலும் நன்கு அம்பலமாகி வருகிறது. சொந்தக் காலில் நிற்போம், அன்னிய ஊடுருவலுக்கு நாட்டை ஒருநாளும் அடகு வைக்கமாட்டோம என்று கர்ஜித்தவர்கள் இவர்களே. இந்த கர்ஜனை 1971-ம் வருடம் நடந்த பங்களாதேஷ் விடுதலைப் போர் சமயத்திலும், அமெரிக்காவின் 7-வது கடற்படை வங்காள விரிகுடாவுக்குள் நுழைய முயற்சித்த பிறகும் வெகு பலமாகக் கேட்டது.

ஆனல்—இப்போது இந்தோ—அமெரிக்கக் கூட்டுக் கமிஷன் மூலம் அதிகார பூர்வமாக அமெரிக்க மூலதனத்தின் கணிசமான நுழைவுக்கும் அமெரிக்க மூலதனமும இந்திய மூலதனமும கூட்டுச் சேர்ந்து வேறுநாடுகளில் சுரண்டலுக்குக் கைகோர்த்துக் கொண்டு செல்லவும் ஏற்பாடாகியுள்ளது, திரு. சவான மட்டுமின்றி, திரு. சி. சுப்ரமணியம், திரு. சாட்டோபாத்யாயா, திரு. டி ஏ. பை முதலிய மத்திய சர்க்கார் அமைச்சர்கள் அன்னிய மூலதனம் அன்னிய வர்த்தகம்—இவற்றின் அவசியத்தை சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம நமதுநாட்டு மக்களுக்கு அறிவுறுத்தி வருகிறார்களல்லவா?

அமெரிக்க மூலதனம் மட்டுமல்ல, ஜப்பானிய மூலதனமும்-பிரிட்டிஷ் மூலதனமும் பிரெஞ்சு மூலதனமும் இத்தாலிய மூலதனமும கூடநமது பொருளாதாரத்தைபாதுகாக்கவருகின்றன. கனடா, ஸ்வீடன், டென்மார்க், ஹாலந்து முதலிய சின்னஞ்சிறு நாடுகளும் முதலீடுகளை அனுப்பலாம். இரான் நாட்டோடு ஒப்பந்தமே உருவாகி விட்டது, பல கோடி டாலர்கள் நமக்கு அனுப்பிவைக்க, 11—11—75ந் தேதிய பத்திரிகைச் செய்திப்படி பெல்ஜிய முதலாளிகளுடன் கூட்டுச் சேர்ந்து பிறநாடுகளில் கூட்டுத் தொழில் நடத்தத் திட்டமிட்டு, டஹ்ரேன் என்ற அரபு நாட்டில், ஒரு உரத் தொழிற்சாலையை நடத்தவும, காமெரூன் என்ற ஆப்பிரிக்க நாட்டில் காகிதத் தொழிலையும், சர்க்கரைத் தொழிலையும நடத்தவும், இந்துமா கடலில் உள்ள மௌரீஷியஸ் தீவில் காகிதத் தொழிற்சாலையை உருவாக்கவும் இந்திய— பெல்ஜியத் திட்டம நிறைவேற்றப்பட்டு வருகிறது. அன்னிய மூலதனததிற்கு அழைப்பும பல சலுகைகளும் ஏற்கெனவே அளித்தது போதாதென்று இப்போது கருதப்பட்டு, மேலும் ஆவன செய்ய இந்திய சர்க்கார் ஆலோசித்து வருவதாக 11—11—75 "இந்தியன் எக்ஸ்பிரஸ்" கலையங்கம கூறுகிறது. இதுவரை 40சதவிகிதம் வரை அன்னிய மூலதனம இங்கு தொழிலில் அனுமதிக்கப்பட்டுள்ளதென்றும், தேவைப்படுமிடங்களில் இதைக்கூட்டிச் சேர்த்தலாமென்றும் தெரிகிறது. ஆனல் சில முக்கிய தொழில்களில் மட்டும் அன்னிய மூலதனம் அனுமதிக்கப்பட்டால் போதாது, அந்தத் தடையையும் நீக்கி லாபகரமான அடிப்படையுள்ள இதர எல்லாத் தொழில்களும் அனுமதித்தால்தான் தான் இந்தியாவுக்குள் நுழைய விரும்புவதாக அன்னிய மூலதனம் அறிவித்துள்ளதாம். இந்த உரிமையும் வழங்கப்படும. நாம் "சொந்தக் காலில்தான் நிற்கிறோம், "இரவல் காலிலல்ல" மறந்து விடாதீர்கள்!

இது சில பிற்போக்கு மத்திய அமைச்சர்களின் சதி, பிரதமருக்கு இது தெரியாமலிருக்கலாம், இது மத்திய அரசின் கொளகையல்ல என்று பிரதமர் இந்திராகாந்தி அவர்களுக்கு வக்காலத்து வாங்கும் நண்பர்களும் பல நாட்டிலுண்டு ஏனெனில், அடிக்கடி மதுநாட்டின் சுயேச்சைதன்மையைப் பற்றியும் வெளியார் தலையீட்டை நாம் அனுமதிக்கமாட்டோம் என்றும் அடிக்கடி நமது பிரதமர் தவருது பேசி வருகிருரல்லவா?

அண்மையில் அமெரிக்காவிலிருந்து இரு செனட்டர்கள், (பார்லிமெண்ட் உறுப்பினர்கள். அந்த நாட்டு சர்க்காரில் முக்கிய பதவிகளில் இருப்பவர்களல்ல] விஜயம் செய்தபோது டெல்லியிலுள்ள அமெரிக்க தூதுவர் அளித்த விருந்துக்கு இந்திரா காந்தி அவர்கள் சென்றிருந்தார் அல்லவா? அயல் நாட்டுப் பிரமுகர்கள் வந்தால்தான் செல்லக்கூடிய பிரதமர் இவ்வாறு சென்றதும் அமெரிக்காவுடன் நல்லுறவை நாடுகிறேமென்று பேசுவதும் சம்பிரதாய மரியாதைக்குத்தான், இதில் வேறு அர்த்தமொன்றும் கற்பிக்க வேண்டாம், அதேமாதிரி, திரு, சவான அமெரிக்காவுக்குச் சென்றபோது அவர் மூலம நமது பிரதமர் அமெரிக்க ஜனதிபதிக்கு இந்த நாட்டுக்கு விஜயம செய்யும்படி. அழைப்பு அனுப்பினாலும் அதுவும் ஒரு சம்பிரதாய மரியாதைதான்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழுசார்பில், தீக்கதிர் அச்சகத்தில் (6-16 பைபாஸ் ரோடு மதுரை 625018) அச்சிட்டுவெளியிடுபவர் ஆசிரியர் எம். ஆர். வெங்கட்ராமன்.

# வறட்சி நீடிக்கிறது — ஆனல் நிவாரணப்பணி நின்று விட்டது

## உசிலைத்தாலுகா நிலைகுறித்து பாதயாத்திரைகுழு

மதுரை மாவட்டம் உசிலப்பட்டி பகுதியில் வறட்சி இன்னும் நீடிக்கிறது ஆனல், தமிழகஅரசின் வறட்சி நிவாரணப் பணி நின்று விட்டது என்று அத்தாலுகாவில் கடந்த மாத இறுதியில், பாதயாத்திரை பிரச்சாரம் செய்து வந்த தோழர்கள் கருத்து தெரிவித்துள்ளனர்.

தாலுகா மார்க்சிஸ்ட் கட்சி செயலாளர் உ ச உலகப்பாவும், தாலுகாக் கமிட்டி உறுப்பினர் பூ பி பாலுச்சாமியும் வாழ்த்தி வழியனுப்ப—

மார்க்சிஸ்ட்கம்யூனிஸ்ட்கட்சி, விவசாயிகள்சங்கம் சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி ஆகியவற்றைச் சார்ந்த முன்னணி தோழர்கள் 14 பேர் கொண்ட குழு, தாலுகாவிவசாயிகள் சங்கத்தலைவர் என் பரமன், செயலாளர் எம் ஏ தமிழரசு ஆகியோர் தலைமையில் பாத யாததிரை துவங்கியது. இக்குழு 40 கிராமங்களில் இன்றைய அரசியல்நிலை, கிராம மக்களின் நிலைமை], ஸ்தாபன ரீதியில் திரள வேண்டியதின் அவசியம் ஆகியவற்றையும் விளக்கியது.

முதல் நாள் அன்னம் பாரி பட்டியில் துவங்கி துரைச்சாமிபுரம் புதூரில் முடிந்தது. இரண்டாம் நாள் திம்ம நத்தத்தில் துவங்கி உசிலம்பட்டியில் முடிந்தது. 3-ம் நாள் கருக்காட்டான் பட்டியில் துவங்கி தொட்டப்ப நாயக்கனூரில் முடிந்தது.

மக்கள் உணவும் சிற்றுண்டிகளும் காபி, டீ, கலர், முதலியனவும் வழங்கி உபசரித்தனர்.

இப்பாத யாத்திரையின் போது உசிலைத் தாலுகா கிராம மக்களின் நிலை பற்றி பாத யாத்திரைக் குழு தரும் தகவல்கள் வருமாறு:—

பாதயாத்திரைக் குழுவினர் சென்றவுடன் எல்லாக் கிராமங்களிலும் மிகுந்த மகிழ்ச்சியான வரவேற்புக் கொடுக்கப்பட்டது. சிலகிராமங்களில் மக்கள் முணுமுணுக்கத் தொடங்கினர். காரணம் என்ன என்று கேட்டால் "ஆமா, நாங்க ஊருக்கெல்லாம் ஓட்டுப் போட்டுத் தவிச்சுப் போனேம். இப்ப நீங்கவேறே ஓட்டுக் கேட்டு வந்தீர்களாக்கும்" என்று கேட்டார்கள். உடனே குழுவினர் அந்தத் சுவருன எண்ணத்தைப் போக்கி, மக்கள் பிரச்சினைகளை நேரடியாகக்காண்பதும் அந்தப்பிரச்சினையைத் தீர்ப்பதற்கு, ஒரேவழி சங்கங்கள் அமைதது போராடுவது ஒன்றுதான் என்பதைவிளக்குவதும்தான் தங்களது பாத யாத்திரையின் நோக்கம் என்பதைக் கூறியவுடன் அனைத்துமககளும மகிழ்ச்சியாக வரவேற்றனர்.

### பொதுவான நிலைமைகள்:

மற்ற பகுதிகளில் இப்பொழுது நல்ல மழை பெய்து கொண்டிருந்தாலும் தொடர்ச்சியாக கடந்தமூன்றுஆண்டுகளாக உசிலம்பட்டித் தாலுகாவில் மட்டும் பருவ மழைதவறிவிட்டது. இந்தத் தாலுகாவில் நிறுத்தக் கூடாத வறட்சி நிவாரண வேலையை அரசு நிறுத்திவிட்டது. வறட்சியால் இந்தத் தாலுகா முழுவதும் கடுமையாகப் பாதிக்கப்பட்டுள்ளது. விதைத்த புஞ்சைத் தானியங்களும் கருகிக் கொண்டிருக்கின்றன. ஏற்கனவே நடந்த வறட்சி நிவாரண வேலைகள் சரியாக நடக்காததாலும், இப்பொழுது நிவாரண வேலையை நிறுத்திவிட்டதாலும் இப்பகுதி கிராம ஏழைகள் மிகவும பாதிக்கப்பட்டுள்ளனர். 'கண்மாய், கிணறு முதலியவற்றில் தண்ணீர் கிடையாது. கிணறுகளுக்கு அரசுக் கடன் கிடைக்கவில்லை.

பம்புசெட் போட்டக் கிணறுகள் ஆழமாகத் தோண்டப்பட்டதால் பக்கத்தில் உள்ள கமலைக் கிணறுகளில் நீர் கிடையாது. அதனல் சிறு விவசாயிகள் எந்த பயிரும் செய்யமுடியாத நிலை உள்ளது. கிராமங்களில் உள்ள 40 சதம் குடும்பத்தினருக்கு நிலம் கிடையாது. ஒவ்வொரு கிராமத்திலும் 10, 15 குடும்பங்களுக்கு குடியிருக்க வீடுகள் கிடையாது.

எல்லாக் கிராமங்களிலும் உள்ள மக்களின் தோற்றங்கள் குறிப்பாக குழந்தைகளின் தோற்றங்கள் மிகவும் வேதனையளிக்கக் கூடியதாக—எலும்பும தோலுமாம— இருககிறது.

நாள் ஒன்றுக்கு ஒருவேளை சாப்பாட்டிற்கே லாட்டரி அடிக்கிறார்கள். அவர்களின் தலை எண்ணெயைக் கண்டு பல மாதங்களாகின்றன. தொட்டப்பநாயக்கனூரில ஒருவர் கூறினர்' "நெல் சோறு நான் பார்த்தது ஆடி மாசந்தானுங்க" அதன் பிறகு நான் அரிசியைக் கூடப் பார்க்கவில்லைங்க" என்றார்.

கிராமங்களில் பெண்களுக்கு நாள் முழுவதும் கூலி ரூ 2ம் ஆண்களுக்கு-ரூ 4ம் தான் கொடுக்கபபடுகிறது. அதற்கும் கூட உத்தரவாதம் இல்லை. தானியக்கூலி என்பதே கிடையாது. சில இடங்களில் விலைவாசிக்குத் தகுந்தவாறு தானியக்கூலி கொடுக்கப்படுகிறது ஒவ்வொரு கிராமத்திலும 2. 3 குடும்பங்கள் தான் ஓரளவு வசதியாக இருக்கின்றன. அவர்கள் ஏழைகளுக்குக் கொடுக்கும் கடனுக்கு அநியாய வட்டி வசூலிக்கிறார்கள்.

சாகுபடி செய்யும்காலத்தில் கொடுக்கப்படும் கடனுக்கு தானிய வட்டி வசூலிக்கப்படுகிறது. அதைக் கேட்டால் நெஞ்சே பற்றி எரிகிறது. ரூ 100 க்கு 6 மாதத் தவணைக்கு 12 மரக்கால் நெல் வசூலிப்பார்களாம்.

ஏழை எளிய விவசாயிகளிடம் அவர்கள் வைத்திருக்கக்கூடிய துண்டு நிலங்களையும இந்த சுரண்டும் கூட்டம் இதுபோன்ற அநியாய வட்டியால் விழுங்கிய சோகக்கதைகள் இத்தாலுகாவில் நிறைய உண்டு.

இது போன்றவைகளால் பாதிக்கப்பட்ட மக்கள் பிழைப்பைத் தேடி வெளி இடங்களுக்கு குடிபெயர்ந்து விட்டார்கள். ஆகவே கொக்குடையான்பட்டி, மொண்டிக்குண்டுகுளத்துப் பட்டி, பேயம்பட்டி போன்ற ஊர்களில் குட்டிச்சுவர்கள் தான் வறுமையின் நினைவுச் சின்னங்களாக காட்சி அளிக்கின்றன.

எர்ரம்பட்டி என்ற கிராமம் 30 வீடுகளைக் கொண்டது. அவர்கள் கம்பளத்து நாயுடு என்ற இனத்தைச் சேர்ந்தவர்கள். "ராஜ பரம்பரை"களாம். அதனல் "முன்னேறிய" ஜாதிக்கு அரசாங்கச் சலுகைகள் கிடைப்பதாம். ஆனல் அந்த "ராஜா"க்களை நேரில் பார்க்கும்பொழுது "இவர்கள் மலைவாழ் ஜாதியினர், பளியர்களாகத்தான் இருக்க வேண்டும்" என எண்ணினேம். மலையின் அடிவாரத்தில் உலகின் எந்தவிதத் தொடர்பும் இல்லாமல் இருக்கிறது இப்பகுதி சில கிராமங்கள் சாலை வசதியில்லாமல் தீவுகளாகக் காட்சியளிக்கின்றன.

### கல்வி நிலைமை

பெரும்பாலும் கிராமமக்கள் எந்தவிதக் கல்வியறிவும் இல்லாமல் இருக்கிறார்கள். சுரைக்காய்ப்பட்டி, இடையபட்டி என்ற கிராமங்களில் பெண்களில் ஒருவர்கூட— ஆண்களில் 100-க்கு 95சதம் கையெழுத்துப் போடக்கூட தெரியவில்லை, நகரத்தைச் சுற்றியுள்ள பகுதியில் 30 சதம் படிக்கத் தெரிந்தவர்களாக இருக்கிறார்கள், பெரும்பாலும கிராமச் சிறுவர்கள் —எதிர்கால இந்நாட்டு மன்னர்கள்—மாடு மேய்ப்பதற்கும், குழந்தைகளை வைத்துக் கொளவதற்கும்தான் பயன் படுத்தப்படுகிறார்கள்.

### ரேசன்

கிராமப்புற கொள்ளையடிக்கும் கும்பலுக்கு, ரேசன் கடை ஒரு வரப்பிரசாதம் பொதுவாக எந்தக் கிராமத்திலும் ரேசன் போடுவதில்லை. ரேசனை வெளிமார்க்கெட்டில் விற்று விட்டு கிராமமக்களுக்குஎதுவும் போடுவதில்லை

வெள்ளைமலைப் பட்டியில் ஓரளவு ரேஷன் போடுவதாகக் கூறினர்கள். பாப்பா பட்டியில் ஒரு பெண் கூறினர், "பாவிப்பயக எதுமே போடாட்டிக் கூடப் போருங்க, இந்தச் சீமைத் தண்ணியாவது [மண்ணெண்ணை) கொடுக்கக் கூடாதா அவங்க வீட்ல எழவு விழ" என்று ஆத்திரமாகக் கூறினர், உததபபநாயக்கனூர் சொசைட்டியில் ஒன்னரை லட்சரூபாய் கையாடல் நடந்துவிட்டதாகவும் அதனல் அது இயங்க முடியவில்லை என்றும் கூறப்பட்டது, முத்துப்பாண்டிபட்டியில் ஒருவர் கூறினர், "எல்லாவற்றையும் வித்துத் தொலைச்சுட்டாலும். இருக்கிறத ஒழுங்காப் போடறதுக்கு என்னங்க, கோதுமையிலே மண்ணைக் கலந்து விற்கிறானுங்க" என்றார்,

பல ஊர்களில் கோதுமை அதிக விலைக்கு விற்கிறார்கள். அதையும் படிக்கணக்கில் போடுகிறார்கள். இது போன்ற கொடுமைகளால் கிராம மக்கள் மேலும மேலும் அவதிக்குள்ளாகி கொதிப்படைந்து காணப்படுகிறார்கள்.

### பஞ்சாயத்து

மொண்டிக்குண்டு தவிர வேறு எங்கும் பஞ்சாயத்துக்களின் ரேடியோவை பார்க்கவோ, கேட்கவோ பாதயாத்திரைக் குழுவினரால் முடியவில்லை. பஞ்சாயத்துக்களுக்கு வருகின்ற தினசரிப் பத்திரிகைகள் ஒழுங்காக மக்களுக்குக் கிடைப்பதில்லை. கிராமங்கள் எந்த விதசுகாதாரமுமின்றிமிகவும் அசுத்தமாகக் காட்சியளிக்கின்றன. குடிதண்ணீர் 3 கிராமங்களைத் தவிர வேறு எங்கும் உத்தரவாதம் இல்லை. பெரும்பான்மையான கிராமங்களில் வாழும் முதியோர்களுக்கு மனுப்போட்டும் முதியோர் பென்சன் கிடைக்கவில்லை. பல கிராமங்களில தபால்கள் சரியான நேரத்திற்குவருவதில்லை. வெள்ளைமலைப்பட்டியில் கல் உடைக்கும் தொழிலாளர்களைத் தாசில்தார் 'கல் உடைக்கக் கூடாது' என்றும் மீறிக் கல் உடைத்தால் 'நீங்கள் புதையல் எடுத்தீர்கள்' என்று பகார் செய்வேன் என்றும் சொல்கிறாராம். மக்கள் கூடி நின்றால்உத்தப்பநாயக்கனூர் போலீசார் பிடித்துச்சென்று பெட்டிக்கேஸ் போடுகிறார்களாம்.

இங்கு ஒரு ஆசிரியர் 30 ஏக்கர் புறம்போக்குநிலத்திற்கு சமுதாயக் கிணறு வெட்டுகிறேன் என்று கிராம மக்களை ஏமாற்றி

உங்களுக்குப் பட்டா போட்டுத்தருகிறேன் என்று கூறி ஓசியாக வேலைவாங்கி விட்டு) தன்னுடைய 8 மக்களுக்கு மட்டும பட்டா போட்டுக்கொண்டாராம். அநியாய வட்டிக்கு கொடுத்து அந்த ஊர் மக்களைச்சுரண்டுகிறாராம்

### வட்டிக் கொடுமை

அந்தஆசிரியர்வலதுகம்யூனிஸ்ட் மாநிலத்தலைவர் ஒருவர் தங்கைஎன்றுகூறப்படுகிறது. முத்துப்பாண்டிபட்டி என்ற கிராமத்தில் வீடு கட்டித் தருகிறேன் என்று கூறி இந்திரா காங்கிரசைச் சேர்ந்த ஒருவர் 17நபர்களிடம் ரூ 400, 500 என்று வாங்கி ரூ 5000 ஐ மோசடி செய்து விட்டாராம். ஏமாற்றப்பட்ட அவ்வூர் மக்கள் மிகவும வேதனையிலும் சோகத்திலும் மூழ்கி இருக்கிறார்கள்.

மேலும சிலகிராமமக்கள் 4, 5 மைல் சென்று தங்களின் பிழைப்புக்காக பக்கத்தில் உள்ளமலைகளில் விறகு எடுத்துவந்து பிழைக்கிறார்கள். ஆனல் காட்டிலாகா அதிகாரிகள் அந்த ஆட்களிடம் மோசமான முறையில் நடந்து கொள்வதுடன விறகுக் கட்டுகளையும் பிடுங்கிக கொள்கிறார்களாம்.

இத்தகைய கொடுமைகளை பாதயாத்திரைக் குழுவினர் நேரில் பார்த்து வேதனையடைந்தனர். இக்கொடுமைகளைக் களைந்தெறிய சங்கம் அமைத்துப் போராடவேண்டியதன் அவசியத்தைவிளக்கிப் பிரச்சாரம் செய்தனர்.

கூலி விவசாயிக்கு கூலி உயர்வு வேண்டும்!

விவசாயி உற்பத்திப் பொருட்களுக்கு நியாயவிலை வேண்டும்!

விவசாயிகளுக்குநீண்ட காலக்கடன் வேண்டும்!

500 குடும்பங்களுக்கு ஒரு மலிவு தானியக்கடை வேண்டும்!

ஆணுக்கும் பெண்ணுக்கும் சம வேலைக்கு சம கூலி வேண்டும்!

என்றமுழக்கங்களைபாதயாத்திரைக குழுவினர் விண்ணதிர முழங்கிக்கொண்டு ஊர்களுக்குள் நுழையும போதெல்லாம் கிராம மக்களின் முகங்களில் மகிழ்ச்சி தாண்டவமாடியது. உழைக்கும் மக்களின் உரிமைப் போராட்டக் கொடியான செங்கொடிகளைக் கண்டவுடன் புதுநதெம்பு பிறந்தது போன்று ஆரவாரம் செய்து வரவேற்று உபசரித்தனர்.

## ஆசிரியருக்கு

### மாநகராட்சி கவனிக்குமா?

ஐயா,

மதுரை நகராட்சியை மாநகராட்சியாக மாற்றும பொழுது புதிதாக பல பகுதிகள இணைக்கப்பட்டன. அவைகளில் பொன்மேனி பேரூராட்சியைச் சேர்ந்த பெததானியாபுரம், பாத்திமா நகர் போன்ற பகுதிகளும் அடங்கும். மாநகராடசி தொடங்கி இரண்டு ஆண்டுகள் முடிந்தும் இபபகுதிகளில் சரியான பாதைவசதிகள், குடிநீர் வசதிகள், கக்கூஸ் வசதிகள் போன்றவை இல்லை.

போதிய கவனிப்பு இல்லாத காரணத்தால் பாதைகள் மேடு பள்ளமாக காட்சியளிக்கிறது. குறிப்பாக பெத்தானிபாபுரம்காமராஜர் வீதியில் பாதையின் மைய பகுதி தாழ்ந்து இருக்கிறது. மழைக காலங்களில் நீர் தேங்கி "குளம்" போல் காட்சி தருகிறது. மேலும் இப்பகுதிகளில் இருக்கும் வீடுகளிலிருந்து வரும கழிவு நீர் [சாக்கடை வசதியின்மையால்] தேங்கிய மழை நீருடன இரண்டறக் கலந்து சுகாதாரக கேட்டினை உருவாக்கிவிட்டது. கொசுபடைகள் பெருகி காலரா போன்ற தொத்து வியாதிகள் பரவ வாய்ப்பு ஏற்பட்டுவிட்டது. இப்பகுதிகளில்குடியிருக்கும பொது மக்கள் மிகுந்த பயத்துடன் இருக்கிறார்கள.

எனவே, மாநகராட்சி உடனடி நடவடிக்கைகள் மேற்கொண்டு இப்பகுதி மக்களை காலரா அபாயத்திலிருந்து காப்பாற்றும்படியும் மேலும் தேவையானபாதை வசதி, குடிநீர் வசதி, சாக்கடை வசதி, கக்கூஸ் வசதி போன்றவைகளை ஏற்படுத்தி தரும்படி சம்பந்தப்பட்ட அதிகாரிகளைக் கேட்டுக் கொள்கிறேன்.

இப்படிக்கு
கே ராம்தாஸ்
பெத்தானியாபுரம்

### திருச்சி பகுதியில் இளைஞர் முன்னணி

திருச்சி, நவ. 11—

திருச்சி சபரி மில்லை அடுத்துள்ள சரளபட்டி, குள்ளப்பட்டி, உடகுளத்துப் பட்டி சோசலிஸ்ட் இளைஞர் முன்னணி துவக்க விழா கடந்த 8-ந் தேதி நடந்தது. அன்று நடந்த பொதுக்கூட்டத்திற்கு தோழர் எஸ் பி, பெருமாள் தலைமை வகித்தார்.

முன்னணியின் மாவட்டச் செயலாளர் வி. பரமேஸ்வரன். எஸ். கஸ்தூரி ரெங்கன், வெங்கிடாசலம் ஆகியோர் இன்றைய அரசியல் நிலையின் தன்மைகளையும், இளைஞர்கள் முன்புள்ள முக்கிய கடமைகளையும் விளக்கினர்.

பின்னர் இளைஞர் முன்னணி கிளைக்கு நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

இப்பகுதி கிராமங்களுக்கு மின்வசதி, சாலைவசதி முதலியன செய்துதரக்கோரும் மகஜர்களில் கையெழுத்து இயக்கம் நட்த்தி மாவட்டக் கலெக்டரிடம் அளிப்பது என்று தீர்மானிக்கப்பட்டது.

# காங்கிரசுக் கட்சியோடு ஷேக் அப்துல்லா கட்சி தேர்தல் கூட்டு கொள்ள வேண்டுமாம்

ஸ்ரீநகர், நவ. 9—

வரக்கூடிய பஞ்சாயத்து தேர்தல்களிலும் சரி, சட்டமன்றத் தேர்தல்களும் நாடாளுமன்றத் தேர்தல்கள் நடந்தாலும் சரி. காங்கிரசுக் கட்சியும், தேசிய மகாசபையும் (காஷ்மீர் முதல் அமைச்சர் ஷேக் அப்துல்லாவின் கட்சி) கூட்டாக வேட்பாளர்களை நிறுத்த வேண்டும் என்ற யோசனையை ஷேக் அப்துல்லா ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று முன்னாள் காஷ்மீர் முதல் அமைச்சர் மீர்காஷிம் வேண்டியுள்ளார்.

பிஜ்பெஹாரா என்னுமிடத்தில் நடைபெற்ற பொதுக்கூட்டமொன்றில் பேசிய போது மேற்கண்டவாறு அவர் பேசினர்.

அவ்வாறு இருகட்சிகளும் கூட்டாக வேட்பாளர்களை நிறுத்துவதுதான் இரு கட்சிகளுக்குமிடையேயான மோதல்களைத் தவிர்ப்பதற்கான வழியாம்.

காஷ்மீரில் காங்கிரசுக் கட்சியை எந்த சந்தர்ப்பத்திலும் அழித்துக் கொள்ளப் போவதில்லை என்றும் அவர் கூறினர்.

# உணவு தானிய உதவி அரசியல் நிர்ப்பந்தத்திற்கே ஐ.நா.உணவு அமைப்பு குற்றச்சாட்டு

ரோம், நவ. 9—

வளர்ச்சியடையும் நாடுகளுக்கு கொடுக்கப்படும் உணவு தானிய உதவிகள், உணவு வாங்கும் நாடுகள் மீது அரசியல் நிர்ப்பந்தம் கொடுப்பதற்கான ஆயுதமாக பயன்படுகின்றன. அவ்வாறு பயன்படுத்துவதுநெறி கெட்ட முறையாகும் என ஐ நா சபையின் உணவு, விவசாய அமைப்பின் சேர்மன் மன்சூர் ரூஹானி (இரான்) கூறினர்.

கடந்த சனிக்கிழமைஇந்த அமைப்பின் மாநாடு இங்கு நடைபெற்றது. 131 உறுப்பினர் நாடுகளின் பிரதிநிதிகள் கலந்து கொண்டனர். அம்மாநாட்டில் பேசிய போது அவர் மேற்கண்டவாறு கூறினர்.

மேலும், வளர்ச்சியடையும் நாடுகளில் 375 கோடி ஏக்கர் நிலம்வெள்ளாண்மைகுரிய நிலமாக இருந்தும் கடந்த ஆண்டு பயிரிடப்படவில்லை. அந்நாடுகள் கடந்த ஆண்டு 7 கோடியே 50 லட்சம் டன் பருப்பு வகைகளை ஏற்றுமதி செய்தன என்றும் அவர் குறிப்பிட்டார்.

மேலும் 3 வார காலம் நடைபெறவிருக்கும் அம்மாநாட்டில் அதிகார பூர்வமான பார்வையாளராக கலந்து கொள்ள பாலஸ்தீன விடுதலை இயக்கத்தை அனுமதிப்பதெனவும் முடிவு செய்யப்பட்டது. ஆனல், இதனை அமெரிக்காவும இஸ்ரேலும் மட்டும்எதிர்த்தன

### மதுரை சிந்தாமணியில் நவம்பர்புரட்சிவிழா

16—11—75 மாலை
தோழர்கள்
விருதை எஸ். ஏ. பெருமாள்
கே. சுப்பையா
பி. கிருஷ்ணன்
பேசுவர்

தியாகி ராமசாமி
குழுவின் அரசியல்
கலைநிகழ்ச்சி நடைபெறும்

# மாதர் சங்கம் நடத்தும் ஒரு இலட்சம் மாதர் கையெழுத்து இயக்கம்

## மதுரை மாவட்டத்தில் தீவிரம்

## கே. பி. ஜானகியம்மாள் தகவல்

மதுரை, நவ. 11—

'சம வேலைக்கு சம ஊதியம்' சட்டத்தை கறாராக அமுலாக்குதல், கிராமங்கள் உட்பட மாநிலம் முழுவதும் 500 குடும்பங்களுக்கு ஒரு நியாய விலைக் கடை வீதம் திறந்து உணவு மற்றும் அத்தியாவசியப் பொருள்களை மலிவு விலையில் விநியோகித்தல், அவசர கால நிலையை ரத்துச் செய்தல—முதலிய கோரிக்கைகளை வற்புறுத்தி மாநிலம் முழுதும் மாதர்களிடம் கையெழுத்து இயக்கம் நடத்தி வருகிறது தமிழக ஜனநாயக மாதர் சங்கம்.

### கோட்டாவையும்தாண்டி...

மாநில முதலமைச்சர் திரு கருணாநிதி பாரதப் பிரதமர் திருமதி இந்திரா காந்தி ஆகியோருக்கு தனித் தனியே சமர்ப்பிக்கப்படும் இந்த மகஜர்களில் ஒரு லட்சத்துக்கு மேற்பட்ட பெண்களைச் சந்தித்து கையெழுத்துக்கள் சேகரிக்கப்படுகின்றன. இந்த இயக்கத்தில் தமிழகம் முழுவதும் உள்ள மாதர் சங்கக் கிளைகளும், முன்னணி ஊழியர்களும் தீவிரமாக ஈடுபட்டுள்ளனர். தங்களுக்கு ஒதுக்கப்பட்ட குறியளவை [கோட்டா] யும் தாண்டி அதைப்போல இருமடங்கு, மூன்று மடங்கு கையெழுத்துக்களும்வாங்கியுள்ளன சில கிளைகள்.

மதுரை மாவட்டத்தில் கையெழுத்து இயக்கம்விரைவாக முன்னேறி வருகிறது என்று மாதர் சங்கத்தின தலைவர் தோழர் கே பி ஜானகியம்மாள் அறிவித்துள்ளார். அவர் மேலும் தரும் தகவல்கள்வருமாறு:—

### 2 நாளில் 3101 கையெழுத்துக்கள்

மதுரை மாநகரில் 5ஆயிரம் கையெழுத்துக்கள் பூர்த்தியாகிவிட்டன. பெரிய குளம் — உத்தமபாளையம் தாலுகாவில் 3101 கையெழுத்துக்கள் திரட்டப்பட்டுள்ளன. தாலுகா மாதர் சங்க உறுப்பினர் கம்பம் நபீஷா மட்டும் இரண்டே நாளில் 1150 முஸ்லிம் மாதர்களிடம் கையெழுத்துக்கள் வாங்கியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

திண்டுக்கல் தனலெட்சுமி 3 ஆயிரமும் பழனி மாதுரிதேவி 500-ம் வாங்கியிருக்கிறார்கள். மற்றும் மாவட்டம் முழுதுமுள்ள மாதர் சங்கக் கமிட்டிகளும் கிளைகளும் தத்தம் கோட்டாவை முடிப்பதற்கு முன்னேறுகிறார்கள்.

### விரைந்து செயல்படுவீர்

மாவட்டம் முழுவதும் உள்ள கிளைச்சங்கங்கள் தத்தம் கோட்டாவை முடித்திட விரைந்து செயல்பட வேண்டுமாயும் முடித்த கிளைகள் விரைவில் மாதர் சங்கத் தலைமைக்கு அனுப்பிவைக்கும்படியும் தோழர் கே. பி. ஜானகியம்மாள் கேட்டுக் கொண்டுள்ளார்.